VOL. LXXIV. No. 4. APRIL. 1937.

# அருணோதயம்

# ARUNODAYAM

## THE TAMIL EVANGELICAL LUTHERAN JOURNAL

Published by the Leipzig Evang. Lutheran Mission, Church of Sweden Mission, the Tamil Evang. Lutheran Church and the Danish Mission

“நீ எழும்பி வெளிச்சமாகு, ஏனெனில் உன் வெளிச்சம் உன்னண்டை வருகிறது.” எசாயா 60, 1.

பொருள் அட்டவணை. பக்கம்.



PRINTED AT
JEGAM & Co., DODSON PRESS,
TEPPAKULAM, TRICHY.

1937





தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் பத்திரிகை

Edited by Rev. S. GNANAMANICKAM, Rev. P. GÆBLER
& Mr. G. T. WILLIAMS, B. A., L. T.

No. 4 ஏப்ரில் 1937


## தியானம். *

நமது ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவின் கடவுளும் பிதாவுமானவர் ஸ்தோத்திரத்துக்குரியவர். அவர் இயேசுகிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுந்ததினால் ஜீவனுள்ள நன்னம்பிக்கை உண்டாகும்படி தமது மிகுந்த இரக்கத்தின்படியே நம்மை மறுபடியும் ஜனிப்பித்தார். அழியாததும் மாசற்றதும் வாடாததுமான சுதந்தரம் கிடைப்பதற்கென்றே இப்படி செய்தார் 1 பேது. 1: 3, 4.

நீதிமான் எதிர்பார்ப்பதைப் பெற்று மகிழுவான். தெய்வ பயமில்லாதவன் நம்பி ஆசிப்பது அழியும். (நீதி. 10: 28). பரமபிதா மறுபடியும் ஜனிப்பித்தவர்களுக்கு மட்டுமே இயேசுகிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுந்ததினால் ஒரு ஜீவனுள்ள நம்பிக்கை. அவர் இருதயங்களில் வேலைசெய்யும் நம்பிக்கை இது, அது உயிர்ப்பிக்கிறது, செய்கைக்கும் பாடுகளுக்கும் பெலனளிக்கிறது. அதற்கு மாறாக மறுபடியும் பிறவாதவர்களின் நம்பிக்கை குளிர்ந்ததும் பொய்யானதும் செத்த பாவனையுமாம். பரம சுதந்திரத்தில் நியாயமான பாத்தியம் இருக்கவேண்டுமானால், மறுபிறப்பால் தேவ பிள்ளையாக வேண்டும்; ஏனென்றால் பிள்ளைகள் என்று அழைக்கப்படுகிற

* மகாகனம் பெக்செல் அத்தியக்ஷரவர்களும், சங். S. ஞானச்சரியம் ஐயாவர்களும் ஜர்மன் பாஷையிலிருந்து மொழிபெயர்த்துப் பிரசாரம் செய்யும் தின தியான புஸ்தகத்தின் மாதிரி தியானம்.

வர்களே சுதந்தரராகலாம். மறுபடியும் பிறந்தவர்களுடைய ஜீவனுள்ள நம்பிக்கை அவ்வளவுதூரம் எட்டி அந்த பரம சுதந்தரத்தை நோக்கி எழும்பும்படிக்கு இயேசுகிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுந்து ஒரு ஜீவனுள்ளவராகவும் அநேக சகோதரருக்குள் முதல் பிறந்தவராகவும் அந்த சுதந்தரத்தை தமது வசமாக்கினர். ஆனபடியால் இப்போது கடவுளுடைய எல்லாப் பிள்ளைகளும் அவரோடுகூட எழுந்து உடன் சுதந்தரர் ஆவார்கள். பிதா அவரை எல்லாவற்றிற்கும் மேலாக சுதந்தரவாளியாக ஏற்படுத்தியிருப்பதால் கிறிஸ்துவிடம் ஒரு உயிர்த்தெழுதல் நிச்சயமாக அவசியமாயிருந்தது (எபி 1: 2). இந்த சுதந்தரத்தை ஜீவனுள்ளவரே சுதந்தரிக்கக் கூடியபடியால், அவருடைய உயிர்த்தெழுதல் மறுபடியும் பிறந்த எல்லாருடைய உயிர்த்தெழுதலுக்கும் ஆதாரம். உயிர்த்தெழுந்து முழுவதும் மகிமைப்பட்ட மனுஷரே பரிசுத்த வேதம் சுதந்தரம் என்று அழைப்பதைப் பெறுவார்கள்; அது இப்போது பரமண்டலத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. கர்த்தராகிய இயேசு நியாயத்தீர்ப்பு செய்து நீதிமான்களைப் பார்த்து: வாருங்கள், என் பிதாவினுடையவர்களாய் ஆசீர்வதிக்கப்பட்டவர்களே, உலகம் உண்டானது முதல் உங்களுக்காக ஆயத்தம்பண்ணப்பட்டிருக்கிற ராஜ்யத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்கள் என்று நீதிமான்களுக்குச் சொல்லும்போது அது நிச்சயமாய் கொடுக்கப்படும் (மத். 25: 34). அது எந்த புறம்பான பலவந்தத்தாலும் உபயோகத்தாலும் அனுபவத்தாலும் அழிந்து தேய்ந்து போகாதபடியால் அது ஒரு அழிவற்ற சுதந்தரம்.

சூரியனுக்குக் கீழுள்ள காணப்படும் பொருள் எல்லாம் மாய்கை என்று சொல்லும்படியாய் அழிவுக்குக் கீழ்ப்பட்டிருப்பதுபோல் அது அழிவின் ஊழியத்துக்குக் கீழ்ப்பட்டதல்ல (ரோ. 8: 21; பிர. 1). அது மாசற்ற சுதந்தரம். பூமியிலே சேர்க்கப்படுவதும் மற்றவர்களுக்கு விடப்படுவதுமான சுதந்தரத்தைப் பெரும்படியாகவோ நுண்மையாகவோ ஒட்டியிருக்கிறதுபோல் இதிலே எந்த அநியாயமும் ஒட்டியிருக்கிறதில்லை. ஆயினும் இந்த சுதந்தரமிருக்கும் புது வானத்திலும் புது பூமியிலும் நீதி வாசமாயிருக்கும் (2 பேது. 3: 13). புது எருசலேமிலே ஒரு சாபமுமிராது (தரி. 22: 3). அது ஒரு வாடாத சுதந்தரம். உள்ளேயிருந்து வெளிவரைக்கும் அது வாடாதபடியாலும், அது நெடுநாள் பத்திரப்படுத்தப்பட்டிருந்தும் அதன் பெலனையும் அதன் அழகையும் கொஞ்சமும் இழந்துபோகாததினாலேயும் அது அப்படிப்பட்டது. அப்படிப்பட்ட சுதந்தரம் மறுபடியும் பிறந்தவர்களுக்கு இயேசுகிறிஸ்து



வின் நாள்மட்டும் பரலோகத்தில் **வைக்கப்பட்டிருக்கிறது.** நமது கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் பிதாவாகிய கடவுள் ஞானஸ்நானத்திலும் அதன் பிறகு தமது பரிசுத்த வசனத்திலும் (1 பேது. 1: 23) ஒரு மனுஷனை மறுபடியும் ஜெனிப்பிக்கிறது கிருபையும் மெய்யாகவே பெரிய கிருபையாகவும் இருக்கிறதல்லவா? யார் இதற்குச் சந்தோஷமாய்த் தன்னை ஒப்புக்கொடுக்கமாட்டான்? மறுபடியும் பிறந்தவனின் நிலைமையை அடையவும் தன் முடிவுமட்டும் அதைக் காத்துக்கொள்ளவும் யார் முழு சுறுசுறுப்பையும் உபயோகிக்கமாட்டான். ஞா. பா. 113: 1-4. கீர். 94: 1-3.

---

## பத்திராதிபர் குறிப்புகள்

“ஏன் அழுகிறாய்” என்பது உயிர்த்தெழுந்த இரட்சகரின் வாயிலிருந்து பிறந்த முதல் வார்த்தை. நம்மை ஆற்றித் தேற்றி, சந்தோஷத்தினால் நிரப்பி, இச் சந்தோஷச் செய்தியைப் பிறருக்கும் அறிவிக்க நம்மை உபயோகிக்க விரும்பும் ஆண்டவர் நமக்கு சமீபத்தில் நிற்கிறார். கிறிஸ்தவ சபையே நீ விழித்தெழுந்து, என்றென்றைக்கும் பிழைத்து ஆண்டு கொண்டிருக்கிற உன் ராஜாவின் சத்தத்தைக் கேள். நீ சந்தோஷத்தால் நிரப்பப்பட்டு, பிறரையும் இச்சந்தோஷத்தால் உற்சாகப்படுத்தத் தீவிரி.

*　　*　　*　　*

நமது பள்ளிக்கூடங்களை மேற்பார்க்க “ஸ்கூல் போர்ட்” ஏற்பட்டுவிட்டதால், நமது சபைகளுக்காகத் தங்கள் நேரத்தையும், வரங்களையும் இன்னும் அதிகமாய்ச் செலவிட கனம் ஆலோசனைச் சங்கத்தாருக்கு வசதி ஏற்படுமென்று எதிர்பார்க்கிறோம். உற்சாக ஊழியமும், உற்சாக ஈவுகளும் நமது சபைகளில் பெருக இப் புது ஒழுங்கு உதவிசெய்யுமென நம்புகிறோம்.

*　　*　　*　　*

“சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல்” என்னும் முறையை நமது நிருப நேயர் மேற்கோளாக வைக்கக் கோருகிறோம். நீண்ட நிருபங்களைச் சுருக்கும் பாரத்தைப் பத்திராதிபர் மேல் சுமத்துவது தர்மமல்ல. அநாமதேயக் கடிதங்களுக்கு அருணோதயத்தில் இடமில்லை.

*　　*　　*　　*

தரங்கை மிசியோன் பஞ்சாங்கம் வேண்டுவோர் தரங்கன்பாடி புத்தகசாலைத் தலைவருக்கு எழுதவேண்டும். அருணோ

த்யப் பத்திராதிபருக்கு இப்பஞ்சாங்கப் பிரசுரத்தில் யாதொரு சம்பந்தமுமில்லை.

* * * *

கடந்த 38 வருஷங்களாய் திருநெல்வேலியில் நடைபெற்று வந்த 'ஜீவ தண்ணீர்' என்ற ஓர் மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை பிரசுரிக்கப்பட்டு வருகிறது. அதில் எழுப்புதலான பிரசங்கங்கள், தியானங்கள், வேதபாடக் குறிப்புகள், ஆவிக்குரிய திருஷ்டாந்தங்கள் முதலியன பிரசுரிக்கப்படுகின்றன. தேவ ஊழியருக்கு அவர்களுடைய ஜீவியத்துக்கும் ஊழியத்துக்கும் பரிசுத்த ஜீவியத்தில் முன்னேற்றமடைவதற்கும் அது உதவியாயிருக்கும். அதன் வருஷ சந்தா தபால் கூலி உட்பட அணு 8 மாத்திரம். தேவையானவர்கள் அடியிற் காட்டிய விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்:—Rev. R. V. Asirvadam, Manager, Water of Life, Pannaivilai, Via Srivaikuntam, S. I. R.

———:———

## வாலிபர் பகுதி.

### லுத்தரன் வாலிபரின் 14வது மகாநாடு, தரங்கை—ஏப். 1937

இம்மகாநாடு நாளது ஏப்ரல் மாதம் கடைசி வாரம் உத்தேசம் 23—26 தேதிகளில் தரங்கன்பாடியில் கூடும். திட்டமான தேதிகளும் வேத தியானக் குறிப்புகள், உபன்னியாச ஒழுங்குகள், மற்ற விபரங்கள் முதலியன கூடியசீக்கிரம் சபைப் போதகர்மாருக்கும் தலைவருக்கும் அனுப்பப்படும். விஷய சூசிகை தயாரிக்கவும், மற்றக் காரியாதிகளை ஏற்பாடு செய்யவும், மகாநாட்டின் தலைவராகிய கனம் தாஸன் பண்டிதர், திருவாளர் உவில்லியம் சவரிமுத்து, திரு. பால் டேவிட், திரு. G. T. உவில்லியம்ஸ், திரு D. D. ரேனியுஸ், திரு. தேவநேசன் முதலியோர் சென்னையில் கூடுவார்கள்.

இம்மகாநாட்டில் லுத்தரன் வாலிபர் இயக்கத்தின் சங்க அமைப்பு அமுலுக்குக் கொண்டுவரப்படும். நிர்வாக சங்கத்தார் பிரேரேபிக்கும் சங்க அமைப்பு கிளைச் சங்கக் காரியதரிசிகளுக்கு அனுப்பப்படும். இத்திட்டத்தில் மாறுதல்கள் விரும்புவோர் தங்கள் ஆலோசனைகளை எனக்கு ஏப்ரல் 15உக்கு முன் அனுப்பும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

சபைத் தலைவர்களும் வாலிபர் இயக்கத்தில் அனுதாபமுள்ளவர்களும் தாங்கள் வந்து இதில் பங்கெடுத்து உற்சாகப்



படுத்துவதுமன்றி தங்கள் வட்டங்களிலுள்ள வாலிபரும் இதில் வந்து பலனடையத் தூண்டும்படி கோருகிறேன்.

வாலிபர் புத்துயிர் பெற்று சபைகளை அனல் மூட்ட அமலன் அருள்புரிவாராக.

Tranquebar House,
Trichinopoly.

S. DEVANESAN,
*Lutheran Young People's Secretary*

### சுவிசேஷப் படைமுயற்சி, கருணைகரபுரி—மே, 1937.

சென்ற வருஷம் நடந்ததுபோலவே இவ்வருஷமும் மே மாதம் முதல் இரு வாரங்களில் கோயமுத்தூருக் கருகாமையிலுள்ள கருணைகரபுரியில் சுவிசேஷப் படைமுயற்சிக்கு ஏற்பாடு செய்யப்படும். ஆயத்தமாக முதல் மூன்று தினங்களில் ஒடுக்கக் கூட்டம் இருக்கும். பிற்பாடு படை பவுஞ்சுகளாகப் பிரிந்து பல கிராமங்களுக்குச் சென்று சுவிசேஷ வேலை, கிராம முன்னேற்ற வேலை, ஒளிச் சித்திரம் காட்டல் முதலியன நடத்துவார்கள். சென்ற வருஷம் நடந்த முயற்சியில் கடைசி சில தினங்களில் இரண்டு அம்மாமாரும், ஒரு உபாத்தினியும் வந்து பங்கெடுத்தது மிகவும் பிரயோஜனமாக இருந்தது. கிராமத்தின் தேவைகள் ஏராளம். நகரத்தின் வாலிபரும் ஸ்திரீகளும் தங்கள் விடுமுறை நாட்களிலாவது, கிராமவாசிகளுக்காக சிறிது ஊழியம் செய்ய முன்வருவார்களானால் பலத்த காரியங்களைச் செய்யலாம். இப்படைமுயற்சியில் பங்கெடுக்க விரும்புவோர் ஏனைய விவரங்களுக்கு எனக்கு நேரில் எழுதித் தெரிந்துகொள்ளவும். S. Devanesan, Tranquebar House, Trichinopoly

———:———

### Higher Grade Essay

Write an Essay on "*Christian High Schools in India.*"

(*a*) touching on those aspects of Secondary Education that concern the *Christian* character of the High School and the present day *needs* of the High School Christian boy;

and (*b*) indicating the lines along which our High Schools may more efficiently serve India and the Indian Church.

J. D. ASIRVADAM,
*Secretary, J. C.*

## திருச்சபை வர்த்தமானங்கள்

### சினேட் தோடர்புக்கூட்டம். (S. C. C.)

சென்ற மார்ச்சு மீ 10, 11ம் தேதிகளில் இக்கூட்டம் திருச்சி சீயோன் கோயிலில் நடைபெற்றது. 10ம் தேதியாகிய வியாழன் காலை 9 மணிக்கு உதயகால தேவாராதனை ஒழுங்கின்படி (Matins) சங். ஞானமாணிக்கம் ஐயர் பீட ஆராதனை நடத்த சங். R. தேவசகாயம் ஐயர் "ஆண்டவரே, நீர் நேசிக்கிறவன் வியாதியாயிருக்கிறான்" (யோ. 11, 3) என்ற வாக்கியத்தை ஆதாரமாக வைத்து நமது தமிழ் சுவிசேஷ லுத்தரன் சபை வியாதியாயிருக்கிறதென்றும், ஆயினும் இயேசு இச்சபையை நேசிக்கிறாரென்பதைப்பற்றி நமக்குச் சந்தேகமிருக்கக் கூடாதென்றும், நமது நிலையை அவருக்குச் சொல்லி அவருடைய யோசனைக்கு நம்மை ஒப்புக்கொடுக்கும்போது இவ்வியாதி கடவுளின் மகிமை விளங்குவதற்கேதுவாகுமென்றும் உயிர்ப்பாய்ப் பிரசங்கித்தார்.

பிறகு மகாகனம் அத்தியக்ஷரவர்கள் அக்கிராசனம் வகித்து S. C. C. அவயவங்களுக்கு நல்வரவு கூறி கூட்டத்தை ஆரம்பித்தார். சென்ற வருஷத்தின் வரவு செலவு கணக்குகள் ஒப்புக்கொள்ளப்பட்டன. 36–37ம் வருஷக்கணக்குகளைப் பரிசோதிக்க சங். V. G. ஆசீர்வாதம் ஐயரும், உதகமண்டலம் இம்பீரியல் பாங்க் திருவாளர் A. D. ஆசீர்வாதம் அவர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். நமது சபையைச் சேர்ந்த ஆரம்ப பாடசாலைகளை நிர்வகித்து நடத்த ஒரு வித்தியாசங்கம் (School Board) ஏற்படுவது அவசியம் என்னும் பிரேரபனை ஒப்புக்கொள்ளப்பட்டது. இதன் அவயவங்கள் கனம் ஆலோசனை சங்கத்தாரால் நியமனம் செய்யப்பட்டார்கள் வடக்கு வட்டத்திற்கு சங். K. Heller ஐயர் (convener), சங். V. G. ஆசீர்வாதம் ஐயர், திரு. சாமுவேல் அந்திரேயா உபதேசியாரும், தெற்கு வட்டத்திற்கு சங். G. Eriksson ஐயர், சங். D. A. யாக்கோபு ஐயர், திரு G T. Williams B.A., L.T. அவர்களும் அவயவங்களாக நியமனம் பெற்றார்கள். இவ்விரு சங்கங்களும் ஒன்று சேர்ந்து ஆலோசனைக் கூட்டம் நடத்துகையில் மகாகனம் அத்தியக்ஷரவர்கள் தலைமை வகிப்பார்கள். ஏப்ரில் மாத துவக்கத்திலிருந்து இச்சங்கங்கள் தங்கள் வேலையை ஆரம்பிக்குமாதலால் அதுமுதல் D. E. சங்கங்களின் வேலை நின்றுபோகும்.

சீமை சங்கத்தார் இம்மாறுதலை ஆதரித்து எழுதின நிருபம் வாசிக்கப்பட்டது. அனுவசியமான பள்ளிக்கூடங்களை



நீக்கி, உபாத்திமாருக்குத் தகுந்த சம்பளம் கொடுத்து, பள்ளிக்கூடங்களை அதிகப் பிரயோஜனமுள்ளவைகளாக்குவதே இப்புதிய ஒழுங்கின் பலனா யிருக்கவேண்டுமென்பது அவர்கள் விருப்பம்.

ஆலோசனை சங்க பொக்கிஷதாரியாகிய திரு. டாக்டர் G. ஜோசப் அவர்கள் நமது சபைகளில் சுயாதீனமும் சுயமுயற்சியும் அதிகரிக்கச்செய்யும் நோக்கமாய் பொருளாதார நிலைக்குத் தக்கவாறு 4 பிரிவுகளாக நமது குருசேகரங்களைப் பிரித்து அவரவருக்கேற்ற வீதத்தை திருச்சபைப் பொக்கிஷத்துக்காக வாங்குவதைப்பற்றிக் கொண்டுவந்த பிரேரபனையைப் புனராலோசனை செய்ய ஒரு கமிற்றியாருக்கு ஒப்புவிப்பதாகத் தீர்மானம் நிறைவேறியது. 37–38ம் வருஷ வரவு செலவு திட்டம் ஒப்புக்கொள்ளப்பட்டது. சபைப் பொக்கிஷத்திற்கு மாத வீதம் கொடாதவர்களை எவ்வாறு கொடுக்கச்செய்யலாமென்பதைப்பற்றிப் பலவித யோசனைகள் செய்யப்பட்டன.

10ம் தேதி மாலை 8 மணிக்கு சீயோன் சபை S. C. C. அவயவங்களுக்கு ஓர் விருந்து நடத்தி உற்சாகப்படுத்தினார்கள். 11ம் தேதியாகிய வியாழன் அதிகாலை 6 மணிக்கு திருராப்போஜன ஆராதனை நடந்தது. சங். S. ஞானச்சரியம் ஐயர் பிரசங்கிக்க, சங். B. F. Tiliander ஐயர் சங். M. சாமுவேல் ஐயரும் திருத்தப்பட்ட ஆராதனை முறைமையின்படி பாவ சங்கீர்த்தன, நற்கருணை ஆராதனைகளை நடத்தினார்கள்.

---

விருதுநகர் சுவிசேஷத் தோண்டர் படை முயற்சி. இச்சங்கத்தின் அங்கத்தினர்களுக்குச் சபை குரு S. A. ஆரோக்கியசாமி அவர்களால் ஓர் ஆயத்தக் கூட்டம் விருதுநகர் ஆலயத்தில் வைக்கப்பட்டது. சுமார் 15 பேர் அடங்கிய தொண்டர் படை விருதுநகர் சபையைச் சேர்ந்த நாட்டார்மங்கலத்துக்கு 3—1—37 இரவு 8 மணிக்குப் போய்ச் சேர்ந்தது.

இத் தொண்டர் படை இரண்டாவது தடவையாக அங்கு சென்றதின் காரணம்: 1935ஆம் ஜூன் மாதத்தில் அங்கே நாங்கள் ஒரு முறை நடத்தின சுவிசேஷ வேலையின் முக்கியத்தை யுணர்ந்த நாட்டார்மங்கலம் சபையின் அங்கத்தினரில் ஒருவராகிய திரு. S. சகரியா அவர்கள் இச்சுவிசேஷத் தொண்டர் வேலை செய்வதற்கு வேண்டிய பொருளுதவி செய்வதாகவும், ஷெயார்கள் தங்கள் கிராமத்தைச் சுற்றியுள்ள புறமதஸ்தர்களுக்கு இரட்சிப்பின் சுவிசேஷத்தை அறிவிக்கவேண்டுவதாகவும் கேட்

டுக்கொண்டதே. நாட்டார்மங்கலத்தை மத்தியமாக வைத்துக் கொண்டு இக்கூட்டம் 2 பகிஞ்சுகளாகப் பிரிந்து இரண்டரை தினங்களாகக் காலையிலும் மாலையிலும் அக்கிராமத்தைச் சுற்றியுள்ள சுமார் பதினொரு கிராமங்களுக்குச் சென்று கிறிஸ்துவின் சுவிசேஷத்தைப் பற்பல முறைகளைக் கொண்டு புறமதஸ்தர்களுக்கு அறிவித்தது. கிராமாந்தரங்களிலுள்ள ஜனங்கள் யாதொரு எதிர்ப்புமில்லாமல் சுவிசேஷத்தைக் கேட்டார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

இத்துடன் ஒளிச்சித்திரப்படத்தின் மூலமாக கிறிஸ்துவின் ஜீவியம் உள்ளூர் புறமதஸ்தருக்கும், கிறிஸ்தவர்களுக்கும் எடுத்துரைக்கப்பட்டது. ஜனங்கள் வெகு ஆவலோடு கவனித்துக் கேட்டார்கள். மறுநாள் இரவில் திரு. A. பெனலன் பாகவதர் ஓர் இனிய சத் காலக்ஷேபம் செய்தார்.

இத்திருத் தொண்டில் திருச்சுளி திரு. S. C. சாமுவேல் உபதேசியார் அவர்கள் கலந்துகொண்டதோடு, உள்ளூர் ஆசிரியரும் சபையாரும் இக் கூட்டத்தை அன்புடன் வரவேற்று வேண்டிய சௌகரியங்களையும் செய்தார்கள். மறுநாள் இரவு 8 மணிக்கு சபை குருவால் பரிசுத்த இராப் போசனம் பரிமாறப்பட்டது. ஒவ்வொருநாள் காலையிலும் தொண்டர் படையில் கலந்துகொண்டவர்களுக்குத் தியானக் கூட்டம் வைக்கப்பட்டது.

5உ பகல் 12 மணிக்கு காரியக் கமிட்டிக் கூட்டம் சங். S. A. ஆரோக்கியசாமி அவர்களின் தலைமையின் கீழ் நடைபெற்றது. அவ்வமயம் சுவிசேஷப் படை முயற்சி சங்கத்தின் முன்னேற்றத்துக்கான பல விஷயங்கள் ஆலோசிக்கப்பட்டு ஷை சங்க நிதியை எவ்வாறு விர்த்திசெய்வதென்று பேசப்பட்டுக் கூட்டம் கலைந்தது.

இப்பக்கங்களில் விதைத்த தேவ வசனம் வெறுமையாய்த் திரும்பாமல் அது திரளான கனிகளைக் கொடுக்க திரியேக தேவன் அருள்புரிவாராக. வி. சுவார்ச்சு, விருதுநகர்.

விருதுநகர் உற்சாக ஊழியர் சங்கம். சுவிசேஷ வேலையைக் கிறிஸ்தவர்களல்லாத பெரியோர் சிறியோருக்கு இந்நகரிலும், சுற்றுக்கிராமங்களிலும் செய்யும் நோக்கத்துடன் 21-12-36ல் சங். G. எரிக்ஸன் ஐயர் தலைமையின்கீழ் இச்சங்கம் துவக்கிற்று. இதில் நமது குருமார், சபை அவயவங்களையன்றி C. M. S குரு சங். A. தேவப்பிரியம் ஐயரும் அச்சபையின் அவயவங்களில் பலரும் சேர்ந்து பங்கு பெறுவது குறிப்பிடத்தக்க விஷயம்.



ஒவ்வொரு ஞாயிறிலும் சுவிசேஷப் பிரபல்லியத்திற்காக ஜெபக் கூட்டமும், ஓய்வுநாட் பள்ளிக்கூடங்களும், உள்ளூரிலும் கிராமங்களிலும் சுவிசேஷப் பிரசங்கமும், ஆஸ்பத்திரியில் வியாதியஸ்தரையும், ஜெயிலில் கைதிகளையும் சந்தித்தலுமாகிய பலவித ஊழியங்களை இச்சங்கத்தார் நடத்தி வருகிறார்கள். பெண்களும் இவ்வூழியத்தை நடத்திவரும் நோக்கமாய் பெண்களின் கிளைச்சங்க மொன்று 14-2-37இல் ஸ்ரீமதி R. எரிக்ஸன் அம்மாளின் தலைமையின் கீழ் ஆரம்பித்து திருப்பணி நடத்தி வருகிறது. இந்துப் பிள்ளைகளுக்காக அவர்கள் நடத்தும் 4 ஓய்வுநாட் பள்ளிக்கூடங்களில் 120 பிள்ளைகள் படிக்கிறார்கள். இன்னும் இவ்வுற்சாக ஊழியத்தில் பங்கு பெறாத சகோதரரும் சகோதரிகளும் சீக்கிரம் இதில் சிரத்தையெடுக்க ஜெபிக்கிறோம். 27-2-37இல் இங்கு விஜயம் செய்த நமது அத்தியக்ஷர் இச் சங்கக்கூட்டமொன்றில் தலைமை வகித்து எங்களை உற்சாகப் படுத்தினர். எங்களுக்காக யாவரும் ஜெபிக்கக் கோருகிறோம்.
(சுருக்கப்பட்டது) T. P. ஆசீர்வாதம்.

---

விழுப்புரம் சுவிசேஷப் படை முயற்சி. சென்ற ஜனவரிமீ 18உயில் விழுப்புரத்திற்குத் தெற்கே 5 மைல் தூரத்திலுள்ள பெண்ணையாற்றங்கரையில் ஆற்றுப் பொங்கல் நடைபெற்றது. இந்து ஜனங்கள் ஏராளமாகத் தீர்த்த யாத்திரைக்கு அங்கு வந்து கூடினார்கள். சபை குரு M. S. ஞானசிகாமணி ஐயரும், உபாத்திமாரும் சபை வாலிப பஜனைகோஷ்டிகளோடு சுவிசேஷ வேலையைச் செய்தோம். கனம் பவுல்சன் மிசியம்மாளும் 2 வேதாகம ஸ்திரீகளோடு அங்கு வந்து எங்களோடு சேர்ந்து புறமதஸ்தருக்குப் போதனை செய்தார்கள். கைத்தாள் பிரதிகள் கொடுக்கப்பட்டன. சுவிசேஷப் புத்தகங்கள் விற்பனை செய்யப்பட்டன. அன்று முழுவதும் வெகு உற்சாகமாக கிறிஸ்துவுக்கு சாட்சி கொடுத்து, ஜெபத்துடன் தேவனைத் துதித்துக் கொண்டே திரும்பினோம்.

அறுப்பின் பண்டிகை. விழுப்புரம் எபனேசர் ஆலயச் சபையின் தோத்திரக் காணிக்கைப் பண்டிகை பெப்ருவரிமீ 7—2—37 ஞாயிறு கொண்டாடப்பட்டது. அன்று காலை 8-30 மணிக்கு தோத்திர ஆராதனை கனம் சபை குரு M. S. ஞானசிகாமணி ஐயர் அவர்கள் அன்றன்றுள்ள எங்கள் அப்பத்தை எங்களுக்கு இன்று தாரும் என்ற 4ம் மன்றாட்டின்பேரில் குளிர்ந்த ஆத்துமாக்களை உயிர்ப்பிக்கும் வண்ணமாகப் பிரசங்கம் செய்தார். ஆண்டவரே நமக்கு முதலில் கொடுத்தவர் என்றும், அவர் கொடுத்ததில் ஒரு பாகத்தை அவருக்கே கொடுப்

பது நமக்குச் சந்தோஷமே என்றும், அன்றன்றுள்ள அப்பம் என்பதை லுத்தர் சாஸ்திரியார் இதற்குச் சொன்ன அர்த்தத்தின் மூலமாக விஸ்தரித்து, அன்றன்றுள்ள அப்பம் கிடைப்பதற்கு தேச சமாதானத்தை இன்றியமையாதது என்று வற்புறுத்திப் பேசி, இப்படிப்பட்ட சமாதானம் முன் காலத்தில் எசேக்கியா ராஜாவுக்குக் கிடைத்தது (சனகரீப்பின் படையெடுப்புக் காலத்தில்) என்றார். தம்மையே நமக்குக் கொடுத்த ஆண்டவருக்கு நம்மை ஒளிக்காமல் குறைந்தபட்சம் ஒரு வருஷத்தில் ஒரு நாள் சம்பளத்தையாவது கொடுத்தோமா என்று சோதனை செய்யும்படி ஏவினார்.

ஏற்கனவே ஆராதனை சமயத்திலும் நோட்டீஸ் மூலமாகவும் அறிவிக்கப்பட்டபடி பெண்களின் சவுகரியத்தை முன்னிட்டு அன்று மாலை 3 மணிக்கு மறுபடியும் ஆலயத்தில் சபையார் யாவரும் கூடிக் கொண்டுவந்த ஜாமான்களைப் பீடத்தின் முன் வைத்து களித்துப் பாடு என்ற ஞானப் பாட்டைப் பாடி ஜெபிக்க ஏலம் ஆரம்பித்தது. ஏலம் எடுத்தும் கொடாமல் இருக்கிற சில இடங்களைப் பற்றிய அனுபோகங்கள் சபை குருவால் சொல்லப்பட்டது. சிலர் இப்பண்டிகை எப்போது வருமென்று எதிர்பார்த்து ஏலத் தொகையை உயர்த்தி, திரும்பக் கொடாமல் போனதை ஞாபகப்படுத்தி, இப்போது ஏலமெடுப்பவர்கள் ஒரு மாதத் தவணைக்குள் கொடுத்துவிடவேண்டுமென்றும் சொல்லப்பட்டது. விசேஷமாக ரொக்கக் காணிக்கைக் கொடுப்பதிலிருக்கிற சிலாக்கியங்களும் சபை குருவால் தெரிவிக்கப்பட்டது. சபையார் ஏலமெடுப்பதில் தங்கள் உற்சாகத்தைக் காட்டினார்கள். விசேஷமாக சபையின் பெண்கள் அதிக சந்தோஷமாக ஏலம் எடுத்தார்கள். சபை குரு ஜெபிக்க முடிவடைந்தது. ஏலத் தொகை மொத்தம் ரூ. 32—7—2.

D. தானியேல் தேவசித்தம்.

கோலார் சபைக்குத் தரங்கை அத்தியக்ஷர் சந்திப்பு. சென்ற பெப்ருவரி மீ 20, 21ம் தேதிகளில் நமது அத்தியக்ஷர் மைசூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த கோலாருக்குச் சென்று அங்குள்ள வைத்தியஸ்தாபனம், சபையார் வீடுகளைச் சந்தித்து தேவாராதனைகள் நடத்தினது அங்குள்ள கிறிஸ்தவ சபைக்கு மிக்க எழுப்புதல் உண்டாக்கியிருக்கிறது. அச்சமயத்தில் 10 பேருக்கு ஞானஸ்நானமும் கொடுக்கப்பட்டது. முன் 3 கிறிஸ்தவ குடும்பங்கள் மாத்திரமிருந்த இடத்தில் இப்பொழுது 240 ஆத்துமாக்களுள்ள சபை ஏற்பட்டிருப்பது ஆண்டவருக்கு ஸ்தோத்திரம் செலுத்தவேண்டிய விஷயம். டாக்டர் P. மனுவேல் அவர்களும், திரு. A. தேவாசீர்வாதம் சுவிசேஷகரும்



சபையின் அபிவிர்த்திக்காக எடுத்துவரும் பிரயாசை அதிகம். (சுருக்கப்பட்டது) A. ஞானப்பிரகாசம்.

லால்குடியில் ஓர் புதிய ஆலய அஸ்திபாரம்

கொள்ளிடம் கணவாயைச்சேர்ந்த இவ்வூரில் சங். J. D. பர்வதம் ஐயர் தமது சபையின் ஆராதனைக்கென்று ஓர் ஆலயம் கட்ட எடுத்த முயற்சியின் பலனாக சென்ற மார்ச்சு மீ 10-உயாகிய புதன் மாலை 5 மணிக்கு மேற்படி வைபவம் நடைபெற்றது. S. C. C. அவயவங்களில் பெரும் பாலார் இதில் பங்கு பெற்றனர். வட்ட தலைவராகிய சங். P. கேப்ளர் ஐயர் அக்கிராசனம் வகிக்க, சங். A. S. முத்தையா ஐயர் B. D. புதிய சபையாருக்கு எழுப்புதலுண்டாக்கத்தக்கதாக "ஆலயம்" என்னும் பொருள் மேல் பிரசங்கித்தார். சங். T. M. ராஜேந்திரன் ஐயர், லால்குடியில் திருப்பணி ஆரம்பித்த வயணத்தையும், தற்சமயம் நாம் கூடிவந்திருக்கும் தென்னந்தோப்பும், அதில் நாம் தேவாலயங்கட்ட உத்தேசித்திருக்கும் நிலமும் கிடைத்த வரலாற்றையும் சவிஸ்தாரமா யெடுத்துரைத்தார். திரு. G. T. வில்லியம் அவர்கள் புதிய சபையில் விளங்க வேண்டிய உண்மை, சுயநலமின்மை, மனச்சுத்தம், அன்பு முதலிய சற்குணங்களைப்பற்றிச் சொற்பொழிவு நடத்தினார். மகா கனம் அத்தியக்ஷர் அஸ்திபாரக் கல்லை ஆசீர்வாத வார்த்தைகளோடு நாட்ட, விஜயம் செய்திருந்த குருமார் யாவரும் ஒவ்வொரு வேதவாக்கியத்தை எடுத்துரைத்தார்கள். சங். A. P. சாமுவேல் ஐயர் ஜெபிக்க திருவிழா முடிந்தது. கோலாட்டம், வாணவேடிக்கை, பாட்டு முதலிய காரியங்களிலும், வந்தவர்களுக்கு புஷ்ப தாம்பூல மரியாதை செய்ததிலும் சபையாருடைய உற்சாகம் வெளிப்பட்டது. இவ்வாலயக் கட்டடம் தடையின்றி முடிவுபெற யாவரின் ஜெபமும், பொருளுதவியும் தேவை. கண்டேளித்தோன்.

கருணகரபுரியில் ஞான ஸ்நானம். சென்ற மார்ச்சு மாதம் 16உயாகிய செவ்வாய்க்கிழமை 153 பேர்கள் இங்கு ஞானஸ்நானத்தின் மூலமாய்த் திருச்சபையில் சேர்ந்த சந்தோஷச் செய்தி நம்மை ஸ்தோத்திரத்திற்கு ஏவிவிடும். திருமுழுக்கை மகா கனம் சாந்தகிரென், பெக்சல் அத்தியக்ஷமாரும், இருங்களூர் சங். மனுவேல், கோயமுத்தூர் சங். ஞானச்சரியம், திருப்பூர் சங். சாலொமோன், பல்லடம் சங். K. சாமுவேல், பொள்ளாச்சி சங். யாக்கோபு, கருணகரபுரி சங். ஸ்தேவான் ஐயர்மாரும் நடத்தினார்கள். இப் புதிய கிறிஸ்தவர்களுக்காக நமது ஜெபம் கோரப்படுகிறது. M. சுந்தரம்.

———:———

## " தாத்தாவின் உளறல் "

### 17. வாய் நாற்றம்.

வயிற்றினுள் புண்ணிருந்தாலும், வாய் சுத்தமில்லாமலிருந்தாலும், வாய்திறந்து பேசும்போது துர்நாற்றம் வெளிப்படும். வாய் நாற்றமுள்ளவர்களுக்குத் தங்கள் குறைவு தெரியாது. அவர்களோடு நெருங்கிப் புழங்குவோருக்குத்தான் இக்குறைவு தெரியும். அவர்கள் வாய் நாற்றமுள்ளவர்களுக்குச் சற்று எட்டி நின்றே பேசவிரும்புவார்கள். இவ்வியாதிக்குச் சிகிச்சை செய்யப்படுவது அவசியம். வயிற்றுப் புண்ணை ஆற்றக்கூடிய பதார்த்தங்களையும், ஔடதங்களையும் அவர்கள் உட்கொண்டு, வாயையும் சுத்தம்பண்ண முயற்சிசெய்ய வேண்டும்.

நான் இங்கே முக்கியமாய்ப் பேச விரும்பியது சரீர நோக்காடாகிய வயிற்றுப் புண்ணையும், அதன் பலனாகிய வாய் நாற்றத்துங் குறித்தல்ல. மானிட உள்ளங்களிலே பொதிந்து கிடக்கும் துர் எண்ணங்கள் அவர்கள் பேச்சிலே வெளிப்பட்டு மற்றவர்களுக்கு இடறலுண்டாக்குகிறதை நாம் அடிக்கடி காண்கிறோமே. இயேசுவானவர் இதைக்குறித்து: "வாயிலிருந்து வெளிப்படுகிறவைகளோ இருதயத்திலிருந்து புறப்பட்டு வரும். அவைகளே மனுஷனைத் தீட்டுப்படுத்தும். எப்படியெனில், பொல்லாத சிந்தனைகள், கொலைபாதகங்கள், விபசாரங்கள், வேசித்தனங்கள், களவுகள், பொய்ச் சாட்சிகள், தூஷணங்களாகிய இவைகள் இருதயத்திலிருந்து வெளிப்பட்டு வரும். இவைகளே மனுஷனைத் தீட்டுப்படுத்துகிறவைகள்" (மத். 15, 18-20) என்றார். நமது பேச்சு நமக்குள்ளிருக்கும் துர்க்குணத்தைப் பல சமயங்களில் வெளிப்படுத்துகிறது. இதினால் எத்தனை பேர் மன நோவும், இடறலும் அடைகிறார்கள். பெரியோரின் துர்ப்பேச்சினால் சிறியோருக்கு எவ்வளவு இடறல்? "நாவை யடக்கவோ ஒரு மனுஷனாலும் முடியாது, அது மாறிமாறிப் பொல்லாங்கையே செய்யும்" என்று யாக்கோபு அப்போஸ்தலன் சொல்லுகிறார்.

ஆண்டவருக்குத் தங்களை முற்றிலும் ஒப்புக்கொடுத்து, அவர் தங்களை ஆண்டு நடத்த இடங்கொடுப்போரே தங்கள் நினைவுகளிலும் பேச்சிலும் சுத்தராய் விளங்கக்கூடும். அவர்கள் பேசவேண்டிய வார்த்தைகளை அவரிடமே பெற்றுக்கொண்டு பிறகு வாயைத் திறப்பார்கள். தேவ வசனத்தை ஜெப சிந்தையோடு அனுதினமும் தியானித்து உட்கொள்ளுவது நாற்ற



வாயை மாற்றப் பெரிய உதவியாயிருக்கும். இவ்வாறு கடவுள் தங்களோடு பேசவும், தாங்கள் கடவுளோடு பேசவும் பழகின அவர்கள் வாயினின்று அடிக்கடி ஸ்தோத்திரமாகிய நறுமணம் வெளிப்படும். "கர்த்தரை எக்காலங்களிலும் ஸ்தோத்திரிப்பேன்; அவர் துதி எப்போதும் என் வாயிலிருக்கும்" (சங். 34, 1-2) என்று அவர்கள் பாடுவார்கள். கடவுளுக்கு மகிமையும், பிறருக்கு நன்மையும் உண்டாக்கக்கூடிய காரியங்களே அவர்கள் வாயினின்று புறப்படும். தேவாவியானவரே அசுத்த உள்ளங்களை மாற்றக்கூடியவர். "உங்களுக்கு நவமான இருதயத்தையும் உங்கள் உள்ளத்திலே நம்முடைய ஆவியைத் தந்து, உங்களை நமது கட்டளைகளில் நடக்கவும், நமது நியாயங்களைக் கைக்கொள்ளவும், அவைகளின்படிச் செய்பவும் பண்ணுவோம் என்று கர்த்தர் சொல்லுகிறார். (எசேக். 36 : 26-27) நமது வாயின் துர்நாற்றம் நீங்கி, நமது வாயினின்று நறுமணம் வீச அவரே துணைபுரிவார்.

**"தாத்தா"**

---

## சுகாதாரக் குறிப்புகள்

### இலகு வைத்தியம்

*(Dr. G. Kannusamy, R. I. M., Tiruvarur)*

மிளகும் தும்பை இலையும் அரைத்துக் கழற்சிக்காய் பிரமாணம் காலை மாலை கொடுத்துவந்தால் முறைக் காய்ச்சலும் சாதாரண ஜுரமும் நீங்கும்.

வல்லாரை இலையை நிழலில் உலர்த்தி, தூள் செய்து கொண்டு, அதற்கு இரண்டு இடை சர்க்கரை சேர்த்து, காலை மாலை ஒரு சிட்டிகை அளவு சாப்பிட்டு வர மேக நோய் குணமாகும்.

துளசியை எலுமிச்சம்பழம் பிரமாணம் அரைத்துக் கொண்டு பால் சர்க்கரை சேர்த்து (பாலில் கலந்து சாப்பிடவும். வேண்டுமானால் சீனியைக் கலக்கலாம்) காலையில் சாப்பிட்டுவர உப்பு, புளி, காரம் இன்றிப் பால் சர்க்கரை சேர்த்து ஆகாரம் சாப்பிடவேண்டும். இப்படி மூன்று நாள் சாப்பிட்ட பின் மறு பத்தியம் மூன்று நாள், வறுத்த உப்பு, சுட்ட புளி சேர்த்துப் பதார்த்தங்களுடன் ஆகாரம் புசிக்கலாம். இப்படி சாப்பிட்டு வந்தால் எலி, பெருச்சாளி கடிகளும், நாய் கடி, பூரான் கடி ஆகிய இவைகளும் குணமாகும்.

வில்வ மரத்தின் சமூலமும் கொண்டுவந்து இடித்து கஷாயம் செய்து தினந்தோறும் காலையில் வெறும் வயிற்றில் $\frac{1}{4}$ சேர் அளவு குடித்துவர, மேகநோய், கைகால் பிடிப்பு, கிரந்தி என்னும் கொடிய நோய்களால் மெலிந்திருக்கும் தேகத்தையும் குணம் செய்து மூளைக்குப் பலத்தைத் தந்து, புத்தி கூர்மையை உண்டுபண்ணித் தாதுவின் பலத்தைத் தரும்.

எலுமிச்சம்பழ ரசமும் தேனும் கலந்து சாப்பிட்டுவந்தால் ஒப்பற்ற தாது பலத்தைத் தரும். இதற்கு நிகரான தாது விர்த்தி மருந்து உலகிலில்லை.

பெண்களுக்குக் காணும் கெர்ப்ப வியாதிகளாகிய சூதக வலி, சூதக வாய்வு ஆகிய இவைகளுக்குப் பிரண்டையின் சாறும் விளக்கெண்ணெயும் கலந்து தினந்தோறும் காலையில் $\frac{1}{4}$ சேர் அளவு குடித்து வர நோய் நீங்கி உடம்புக்கு பலம் உண்டாகும்.

வெள்ளாட்டுப் பாலைத் தினந்தோறும் காலையில் $\frac{1}{4}$ சேர் அளவு குடித்துவந்தால், சுவாச ரோகம், இருமல், அக்கினி மாந்தியம், வீக்கம், சீதம் கலந்த பேதி இவைகள் குணமாகும்.

—" இரட்சணிய தீபிகை "

——:——

## செய்தித் திரட்டுகள்

இந்திய சட்டசபைத் தேர்தலில் காங்கிரஸ் கட்சியாருக்கு வெற்றி கிடைத்திருக்கிறது. சென்னையில் காங்கிரஸ் கட்சியில் 158 பேர் சட்டசபையில் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

* * * * *

கட்டுப் பற்களைவிட அசல் பற்கள் எட்டு மடங்கு வன்மையாகக் கடிக்கக் கூடியவை.

* * * * *

இந்தியாவில் அறிவியல் முறையான வைத்திய சிகிட்சை செய்து கொள்ளுகிறவர்கள் நூற்றுக்குப் பத்து விகிதந்தான்.

* * * * *

நிறத்துக்கு நிறம் வித்தியாசம் கண்டு பிடிக்கக் கூடாத 'நிறக் குருடு' என்னும் நோய் பெண் மக்களிடையே காட்டிலும் ஆண் மக்களிடையே பத்து மடங்கு அதிக சாதாரணமாக இருக்கிறது.

* * * * *

இந்தியரில் நூற்றுக்கு 60 அல்லது 70 பேருக்குக் கொக்கிப் புழு நோய் உண்டு. வங்காளத்தில் 70 முதல் 80 பேருக்கு உண்டாம். சென்னை ராஜதானியில் கிழக்கு பாகத்திலும், மத்திய பாகத்திலும், இவ்வியாதி மிகவும் பரவி யிருக்கிறது. பிலிப்பியன் தீவு வாசிகளிற்



தொண்ணூறு சதவிகிதமான ஜனங்கள் இந்நோயினால் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள்.

* * * * *

பாலை, மாதக் கணக்கில் கெடாமல் காக்கக்கூடிய ஒரு புது எளிய முறையை ஜெர்மன் ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். அது என்னவென்றால் பாலினுள்ளே பிராண வாயுவை ஏற்றுவதுதான். இந்த முறையினால் பாலில் கிருமிகள் வளருவது தடுக்கப் படுகிறதென்றும், அது இரண்டு மாதத்திற்கு மேல் கெடாமலிருக்கக் கூடுமென்றும் சொல்லப்படுகிறது.

* * * * *

கக்குவான் நோயுள்ள (Whooping Cough) குழந்தைகளுக்குச் சிகிச்சை செய்ய 15000 அடி உயரமுள்ள மலையின் மேல் அமெரிக்காவில் ஆஸ்பத்திரிகள் கட்டப்பட்டிருக்கின்றன. ஆனால் அவ்விதக் குழந்தைகளை ஆகாயக் கப்பலில் 15000 அடி உயரம் கொண்டு போய், குறைந்தது அரை மணி நேரம் பறந்தால், அக்குழந்தைகள் சுகமாகி விடுகிறார்களென்றும் சிட்னி டாக்டர்கள் கூறுகிறார்கள்.

* * * * *

மிஸஸ் ரெஜினா பிராமி என்ற ஒரு பெண், சான் பிரான்ஸிஸ் கோவிலுள்ள ஹரால்ட்பிரான், ஆல்பெர்ட் லிங்கன், என்ற டாக்டர்களிடம் ஐந்து வருஷத்துக்கு முன் நெஞ்சுவலி என்று சிகிச்சைக்குப் போயிருந்தாள். ஆப்பரேஷன் செய்து பார்த்ததில் இருதயப்பை ஓரத்திலுள்ள எலும்பு கல்லைப் போல் கடினமாய் மாறி வந்திருந்தது. டாக்டர்கள் அதை வெட்டி யெடுத்து விட்டார்கள். அதன் பின் சுகதேகியாய்க் குடும்பத்தில் வாழ்ந்து விட்டு, சென்ற செப்டம்பரில் நிமோனியாக் காய்ச்சலினால் அந்த அம்மாள் இறந்து விட்டாள். அப்பொழுது மறுபடியும் ஆப்பரேஷன் செய்து பார்த்ததில் இருதயத்தைச் சுற்றி அரை அங்குல கனமுள்ள கெட்டியான சலவைக் கல் வளர்ந்து கொண்டிருந்திருக்கிறது.

* * * * *

இந்தியர்களுடைய உணவுப் பொருள்களை அலுமினியப் பாத்திரங்களில் சமைத்துப் பின்னிட்டு அதே பாத்திரங்களில் வைப்பதினால், அந்த ஆகாரங்களில் அலுமினியம் எவ்வளவு கலந்திருக்கிறது என்பதை டட்டா என்பவர் கண்டு பிடித்து நிர்ணயம் செய்திருக்கிறார். அதாவது பழங்கள் மரக் கறிகள் இவைகளின் ரசத்துடன் அலுமினியம் சம்பந்தப்பட்டால், அவை இவற்றுடன் கலந்து போகிறதெனவும் புளி ரசத்துடன் சம்பந்தப்பட்டால் அலுமினியம் இன்னும் அதிகமாய் கரைந்து போகிறதென்றும் கண்டு பிடித்திருக்கிறார். உப்பு சம்பந்தப்பட்டால் அது கரைவது இன்னும் அதிகமாகிறது. ஊனாகிலும் அலுமினியப் பாத்திரத்திலும் வைக்கப்பட்ட தயிரை முறையே எலிகளுக்கு ஆகாரமாகக் கொடுத்தால் அவற்றின் வளர்ச்சியிலும் வம்ச விர்த்தியிலும் சுகத்திலும் யாதொரு வித்தியாசமும் ஏற்படவில்லை.

* * * * *

ஜப்பானியர் மிகவும் குட்டையா யிருப்பதற்குக் காரணம் அவர்களுடைய உணவு முறையே என்று உணவு நூல் வல்லார் கூறுகிறார்கள். அவர்கள் இப்பொழுது உண்ணுகிற அரிசியுடனும் மீனுடனும் கூட, பழரஸம், காட்லிவர் ஆயில், காய்கறிகள் முதலியவற்றையும் உபயோகிப்பார்களானால், அடுத்த தலை முறையிலுள்ள ஜப்பானியப் பிள்ளைகள் இக்காலத்தியப் பிள்ளைகளை விட ஒன்றரை அங்குலம் அதிகம் உயரமாக இருப்பார்களாம்.

---

பிழை திருத்தம்.

1936ம் வருஷம் ஊழியர் பரீட்சா பலனில் கும்பகோணம் D. அன்னம்மாள் f 10 என்பதற்கு பதிலாக 16 என்று இருக்க வேண்டியது.

அரு. பத்.

---

**The Lutheran Church Provident Fund, Madras**

இந் நிதியின் 419, 420, 421, 422ம் மரண அழைப்புகள் 20—3—37ல் 1936ம்ஆ நவம்பர்மீ 30உ யோடு முடிவாகிற வருஷ ரிப்போர்ட்டுடன் வெளியாகும். 419, 420ம் அழைப்புகளுக்கு ஏப்ரல்மீ 20உக்குள்ளும், 421, 422ம் அழைப்புகளுக்கு மேமீ 20உக்குள்ளும் சந்தாக்கள் செலுத்தப்படவேண்டும்.

பின் கண்ட நம்பர்கள் ஒவ்வொரு மரண அழைப்புக் கார்டிலும் நினைப்பூட்டப்பட்டபோதிலும், வெகு காலமாகத் தங்கள் சந்தாக்களைச் செலுத்தாமல் இருக்கிறபடியால் அவர்கள் தங்கள் பாக்கித் தொகை முழுவதையும் அபராதத்துடன் நாளது மேமீ 31உக்குள் அனுப்புவிக்கவேண்டுமென்றும், அப்படி அனுப்பாதவர்கள் நிதியின் உரிமையை இழந்துவிடுவார்கள் என்றும் இதனால் தெரிவிக்கப்படுகிறது:—

21, 63, 86, 150, 156, 175, 545, 553, 25, 26, 38, 73, 133, 147, 164, 174, 190, 211, 237, 273, 313, 372, 420, 440, 481, 497, 500, 520, 557, 596.

நிதியில் தற்சமயம் 65 ஸ்தானங்கள் காலியாயிருக்கிறது மல்லாமல் மேற்கண்ட மெம்பர்களை நீக்க நேரிட்டால் சுமார் 100 இடங்கள் காலியாகக்கூடும். சந்தாதாரர்கள் நிதியின் நன்மையைக் கருதி புதிய மெம்பர்களைச் சேர்க்க தங்களால் ஆனமட்டும் பிரயாசப்படக் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். இனி சேரும் புதிய மெம்பர்களுடைய சௌகரியத்தைக் கருதி நாளது ஏப்ரில்மீ 10உ கூடும் இந்நிதியின் பொதுக் கூட்டத்தில் பிரவேசக் கட்டணம் 20—40 வயதுள்ளவர்களுக்கு ஒரு ரூபாயாக இருக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்படும்.

C. ஞானப்பிரகாசம்,
காரியதரிசி, 24—2—37



# DANISH MISSION

Editor: Rev. Gna. Vedakan, Cuddalore N. T.

## சுவிசேஷ வாக்கிய குறிப்புகள்

ஏப். 4உ உயி. பிந்தின 1ம் ஞாயிறு: யோ. 20: 19-31. சீஷரிடமிருந்த பயத்திற்குக் காரணம் விசுவாசக் குறைவே. ஐம்புலன்களின் அறிவால் சமாதானம் பெற முடியாது. பூரண விசுவாசமே சமாதானம் அளிக்கும். இயேசுவை நம்புகிறவர்கள் பரி. ஆவியைப் பெறுவார்கள். அவர்களே, அவருடைய கட்டளையை "நானும் உங்களை அனுப்புகிறேன்" கீழ்ப்படிகிறார்கள். பிதா அவரை அனுப்பின ஆவியிலும், நோக்கத்திலும், நம்பிக்கை உறுதியிலும், சக்தியிலும், அதே வேலைக்காகவே நாமும் அனுப்பப்படுகிறோம்.

ஏப். 11உ உயி. பிந்தின 2ம் ஞாயிறு: யோ. 10: 11-16. உயிரோடிருக்கும் ஆண்டவர் தமது சீஷரோடு நிலைத்திருப்பதான வாக்கை நிறைவேற்றுகிறார். தமது இடைவிடா அன்பும் பராமரிப்பும் அவர்களோடு இருப்பதாகவும் அவர்களுடைய நம்பிக்கையும் அன்பும் தமதுபேரில் இருக்கும் நிலையையும் திட்டமாய் காட்டுகிறார். நல்ல மேய்ப்பனுக்கும் கீழ்ப்படிதலுள்ள ஆட்டுக்குமுள்ள நெருங்கிய ஒருவர் ஒருவருக்கு இருக்கும் சம்பந்தத்தைப் பேசுகிறார். கூலியாளுக்கும் நல்ல மேய்ப்பனுக்கும் உள்ள உத்தரவாத பேதமும் காட்டப்படுகிறது.

ஏப். 18உ உயி. பிந்தின 3ம் ஞாயிறு: யோ. 16: 16-22. "இன்னும் கொஞ்சகாலம்" என்று ஆண்டவர் சொல்வதின் ஆறுதலும் கருத்தும் ஜீவிய போங்கில் எல்லாவற்றிற்கும் பொருந்தும். ஜீவிய உத்தரவாதம், நடப்பிக்கவேண்டிய ஊழியம், ஜீவிய உபத்திரவமும் சஞ்சலமும், மரண துக்கம் முதலானவைகளுக்கும் "இன்னும் கொஞ்சகாலம்"—"உங்கள் துக்கமோ சந்தோஷமாக மாறும்".

ஏப். 25உ உயி. பிந்தின 4ம் ஞாயிறு: யோ. 16: 5-15. சீஷர்களின் தேவை ஒவ்வொன்றையும் எதிர்பார்த்து அவைகளை நன்றாய் அறிந்தார். தங்கள் கண்காண அவரைக் கண்டபோது, அவரை நேசித்து நம்பியிருக்க முடிந்தது. மறையும்போதோ அவர்களுக்கு விசுவாசம் குறைந்தது. சத்திய ஆவி வரும்போது சகலமும் தெளிவடையும்.

(அல்மனாக்கில் யோ. 16: 5-51 என்று இருப்பது அச்சுப் பிழை: 5-15 சரி).

---

## திருத்தொண்டர் அருட் சரிதை (36)

**Sustaining principle :**—நிலைக்கக்கூடிய மூலாதார உபதேசங்கள்

அமெரிக்காவில் பிரசித்திபெற்ற கிறிஸ்து மார்க்க விரோதியான (Col. Allan) கர்ணல் ஆலன் என்பவருக்கு சிநேகிதனை (Dr. Elliott) டாக்டர் எலியட் என்ற பெரியார் ஒருநாள் கர்ணல் ஆலனுடைய மகள் மரண அவஸ்தையிலிருந்த சமயம் அவரைப் பார்க்கும்படி போயிருந்தார். ஆலன் அவரைத் தமது வாசகசாலைக்கு அழைத்துப்போய், மார்க்க விரோதியாகத் தாம் செய்த சொந்த வேலைத் திறமையால் மிகத் திருப்தியும் பெருமையுமடைந்து, கிறிஸ்துவுக்கு விரோதமாகத் தாம் எழுதிய நூல்கள் அனைத்தையும் அவருக்குக் காண்பித்து, அவரை நோக்கி, "இவை எல்லாம் வெகு நன்றாய் எழுதப்பட்டுள்ளன அல்லவா? என வினவி, இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும் தருவாயிலேயே, தூதுவன் ஒருவன் திடீரென அவ்வறைக்குள் நுழைந்து உமது மகள் ஜீவன் பிரியும் வேளை நெருங்குவதால், உம்மிடம் ஏதோ பேச விரும்புகிறாள் என ஆலனுக்குச் சொல்லவே, ஆலன் என்பவர் உடனே எழுந்து, (தகப்பனும் மகளும் சந்திக்கும் இக்கடைசி சந்தர்ப்பத்தை ஆவலுடன் காண விரும்பிய) தன்னுடன் பேசிக்கொண்டிருந்த டாக்டர் எலியட் என்ற பெரியாரையும் அழைத்துக்கொண்டு, மகள் கிடத்தப்பட்டிருக்கும் அறைக்குள் சென்றார். கர்ணல் ஆலன் என்பவரின் மனைவி தேவ பக்தியுள்ள ஸ்திரீயாயிருந்தபடியால் தன் மகளுக்குக் கிறிஸ்துவின் உபதேசங்களை நன்கு போதித்திருந்தாள். படுக்கையண்டை தகப்பன் வந்தவுடன், மகள் தகப்பனைப் பார்த்து, "அப்பா, நான் இப்போது மரணமடையப்போகிறேன். தாங்கள் கற்றுக்கொடுத்த உபதேசங்களில் நான் நம்பிக்கை வைக்கிறதா? அல்லவெனில், அம்மா கற்றுக்கொடுத்த கிறிஸ்து மார்க்க சத்தியங்களை யான் நம்புவதா? இரண்டில் ஒன்றை இப்போதே அவசியம் எனக்குத் தெரிவித்துவிடவேண்டும் என வேண்டினாள். அளவுகடந்த திறமை வாய்ந்த ஆலனுக்கு இச்சமயம் என்ன மாறுத்தரம் கொடுப்பதென தெரியாமல், சொல்லமுடியா மனக்குழப்பம் உண்டானது. மகளின் மரணப் படுக்கையின் முன் அவர் முகநாடி வேறுபட்டு நடுங்கினது. உடம்பு சிலிர்த்தது. சரீரம் குலுங்கி அதிர்ந்தது. சில நிமிஷங்கள் பேச்சுமூச்சற்று, அமைதியாய் நின்றபின் "அருமை மகளே, உன் அருமைத் தாயார் கற்றுக்கொடுத்தவைகளையே நீ நம்பு" என மௌனமாய் பதிலுரைத்தார். D. A. S.



## (37)

**Justification by faith :**—விசுவாசத்தால் நீதிமான் பிழைப்பான்

சன்னியாசியாக தனித்து வாசஞ் செய்வதாலும், உலக சந்தோஷங்களை வெறுத்துத் தள்ளுவதாலும், பாபப் பாரத்தால் வருந்தும் தன் மனதுக்கு இளைப்பாறுதல் கிடைக்கும் என, மஹாத்துமா லுத்தர் சாஸ்திரியார் நம்பியிருந்தபடி, அவர் காரிய சித்தியடையவில்லை. அப்பால் அவர் தன் மனப் பாரத்தை நிவிர்த்தியாக்கிக்கொள்ளலாமென நம்பி, கி. பி. 1500-ம் ஆண்டு, ரோமாபுரிக்கு ஒரு ஜனப் பிரதிநிதியாகச் சென்றார். ரோமாபுரியின் பட்டணக் காட்சி அவரது கண்களுக்குப் புலப்பட்டவுடன், முகங் குப்புறவிழுந்து, பின் முழங்காலில் நின்று, ஆனந்த பூரிப்புடன் "பரிசுத்த ரோமை நகரே, யான் உன்னை நமஸ்கரிக்கின்றேன்" என, புகழ்ந்து வாழ்த்தினார். ஆனால் அவ்விடத்தில் நடப்பிக்கப்பட்ட காரியாதிகள், அவர் எண்ணியதற்கு எதிரிடையாக இருந்ததைக்கண்டு ஏமாற்றமடைந்தார். அந்நகரில் நடப்பிக்கப்பட்ட துன்மார்க்கத்தையும் கொடுமையையும் கண்டு நடுக்கமுற்று பிரலாபித்தார். "நரகம் என ஓரிடம் உளதாயின், அது ரோமை நகரம் கட்டப்பட்டிருக்கும் இடமே" என பொதுஜனங்கள் அவரிடம் சொன்னார்கள். இச்சமயம் இவர் மூட பக்தி வெறிகொண்ட ஜனத்திரளை ஊடறுத்து, கடைசியாக பிலாத்துவின் படிக்கட்டுகளின்மேல், முழங்கால்களூன்றி ஒவ்வொரு படிக்கட்டையும் ஏறி கடக்க திரும்பினார். வெகு சிரமத்துடன் படிக்கட்டுகளையெல்லாம் தாண்டிச் சென்றவுடன், ஆங்காங்கு தங்கி ஜெப மந்திரங்களைத் திரும்பத் திரும்ப உச்சரித்தார். இந்த வேளையில்தான் "விசுவாசத்தால் நீதிமான் பிழைப்பான்" என்ற இடிமுழக்கம்போன்ற பலத்த ஒரு சத்தம், திடீரென அவருடைய உள்ளத்தில் வலுவாய்த் தொனித்தது. அச்சணமே அவர் எழுந்துநின்று, புண்ணியம் என்றெண்ணும் கர்ம யோக கைங்கரியங்களால், ஜீவ முக்தியாகிய ஆன்ம மல பந்த விடுதலையும், திவ்ய மனச்சாந்தியும் கிட்டுமென தாம் எண்ணியது முழு முட்டாள்தனமென கண்டுணர்ந்துகொண்டார். அவருக்கு அருளப்பட்ட புதிய வெளிச்சத்தின் பலனை, மன மாறுதலடைந்த ஒரு புதுமையான தெய்வீக ஜீவியம் அவரை ஆட்கொண்டு நடத்தியது. இது நடந்த ஏழு வருஷங்களுக்குப் பின்தான், தமது தர்க்கவாத சொற்பெருக்கை வரைந்து, விற்றன்பர்க், ஆலயக் கதவுகளில் ஆணிகள் கடாவி, சீர்திருத்த அறிக்கையை முதல்தடவையாக, பகிரங்கமாக விளம்பரப்படுத்தினார். D. A. S.

———:———

## பொது செய்திகள்

**தாம்பரத்தில் நடந்த சங்க இயக்க கூட்டம்:** தாம்பரத்தில் புதிதாய் அமைத்துள்ள கிறிஸ்தவக் கல்லூரி கட்டிடத்தில் பெப்ருவரிமீ 19-23 தினங்களில் சங்க இயுக்க சம்பந்தமாக சுமார் 200 பேராக, மிஷனெரிகளும், சகல அலுவல்காரரும், மாணுக்கரும், ஆசிரியரும், நர்ஸ்மாரும் டாக்டர்மாரும், வயது வித்தியாசமும், நிலைமை வித்தியாசமும், சபை வித்தியாசமும், ஆண் பெண் வித்தியாசமுமின்றி கூடி தனித்தாள் ஜீவியத்தின் வல்லமை, ஐக்கிய ஜீவியம், கடவுள் ஆளும் ஜீவியம், என்பதின் சம்பந்தமாகத் தங்கள் அநுபவங்களை எடுத்துக் கூறிக் கலந்து கொண்டனர். பர்மாவிலிருந்தும் 4 பேரும், கல்கத்தாவிலிருந்தும், தென்தேசத்து பல இடங்களிலிருந்தும் வந்தனர். டேனிஷ் மிஷன் எல்லையிலிருந்தும் ஏழுபேர் சென்றிருந்தனர். தாம்பர கூட்டத்தின் பலனாக, இனிமேல் சங்க இயக்கம் தமிழ்நாட்டில் தீவிரமாய் பல இடத்தில் பரவி, கிறிஸ்தவ ஜீவியம் ஆழ்ந்து போகும் என்று எதிர்பார்க்கலாம்.

**Radical cure for Rheumatism:** கீல் வாயுவினால் கஷ்டப்படுகிறவர்களுக்கும் பாரிச வாயுவினால் கைகால் விழுந்து எந்த நிலைமையிலிருப்பவருக்கும் கூடலூரில் ஒரு ஸ்டேஷன் மாஸ்டர் பச்சிலைகள் கொடுத்து, அதிகப் பத்தியமின்றி சொற்ப கிரயத்தில் மருந்து கொடுத்து அநேகரைச் சுகப்படுத்தி வருகிறார். இங்கிலீஷ் வயித்தியத்தில் கைவிடப்பட்ட அநேகர் சுகமாகி வருவதை பத்திராதிபர் நேரில் கண்டிருக்கிறார். மருந்து நேரில் வந்துதான் சாப்பிடவேண்டும். நம்பிக்கையோடு வரலாம்.

**The Indian Christian Patriot:** இப்பெயர்கொண்ட வாரப் பத்திரிகை கடந்த $1\frac{1}{2}$ மாதமாய், தின்னனூர் ஆசிரமத் தலைவர் ஸ்ரீமான் H. தேவதாஸ் என்பவரால் ஆங்கிலத்தில் பிரசுரிக்கப்பட்டுவருகிறது. அநேக வருஷங்களுக்குமுன் கிறிஸ்தவ வீடுகளில் வழங்கிவந்த இப்பெயர்கொண்ட பத்திரிகை திரும்பவும் தலைகாட்டியிருக்கிறது. இப்பத்திரிகையில் கிறிஸ்தவர்களுக்கு வேண்டிய சகல சமாச்சாரங்களும் நிறைவுடன் வருகிறது. பத்திரிகையில் தியானம், பிரசங்கம், சபைச் செய்திகள், கிறிஸ்தவ ஊழியம், செல்வாக்கு உலக அதிசய செய்திகள்—சகலமும் சுருக்கமாய் வருகிறது. இப்பத்திரிகை ஒன்றே கிறிஸ்தவ வீடுகளுக்குப் போதும். இதை வாசிப்பது கிறிஸ்தவர்களுடைய கடமையுமாகும்.

**கிராம உத்தாரண வேலைக்குப் பயிற்சி:** கிராமங்களில் நடத்த வேண்டிய சீர் அமைப்பு வேலைக்குப் பயிற்சி கொடுக்க, Y. M.



C. A. சங்கத்தார் கோயம்புத்தூர் ராமனுதபுரத்தில் ஏப்ரில்மீ 26உ முதல் மேமீ 29உ வரையிலும், திருவாங்கூர் மார்தாண்டத்தில் மார்ச்சுமீ 5உ முதல் ஏப்ரில்மீ 28உ வரையிலும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். வேலையில்லா திண்டாட்டமுள்ள சிலர் இங்குபோய் பயிற்சிபெற்று, கோழி வளர்த்தல், தேனீ பராமரித்தல், தோட்டப்பயிர், முதலியவைகளில் தேர்ச்சியடையலாம்.

———:———

## துக்கச் செய்திகள்

**Mrs. ஏசடியாள் ஏசடியான்:** பட்டாம்பாக்கம் சபையைச் சேர்ந்த காலஞ்சென்ற பரமானந்தம் என்பவரின் மகளும் வடதுரசலூர் ஆஸ்பத்திரி பாடசாலை உபாத்தியாயர் ஏசடியான் என்பவரின் மனைவியுமாகிய ஏசடியாள் அம்மாள் ஜனுவரிமீ 30உ காலையில் ஒருஆண் ஒருபெண் ஆன இரட்டைக் குழந்தைகளைப் பிரசவித்தபின், சுரம் கண்டு, அதன்பின்னர் திருக்கோவிலூர் ஆஸ்பத்திரியில் 2—2—37 காலை 4-30 மணிக்கு ஆண்டவரிடம் சேர்ந்தனர். அன்று மாலை கள்ளக்குறிச்சி போதகர் கனம் சாம்சன் ஜான் ஐயர் துக்க வீட்டில் சங். 39, 9 பேரில் ஆறுதலான பிரசங்கம் செய்ய, சீலோவாம் கல்லறைத் தோட்டத்தில் திரள் ஜனங்கள் சூழ, கனம் நல்லதம்பி போதகர், பீலேயாமின் சரித்திரத்தை எடுத்துக்காட்டி, நாமோ நீதிமானைப்போல் ஜீவிக்கவும் மரிக்கவும் ஆசைப்படவேண்டும் என்று பிரசங்கித்து அடக்க ஆராதனை நடத்தினர். இந்த அம்மாளின் வயது 29. விட்டுப்பிரிந்த புருஷன், ஆறு பிள்ளைகள் தாயார், உறவினருக்காக ஜெபிக்கக்கடவோம்.

**Mr. டேவிட் சுப்பராவ்:** இவர் கூடலூர் O. T. பாரி கம்பெனியில் சரக்குகளைக் கப்பலேற்றும் வேலைக்காக எப்போதும் போல் 18—2—37 காலையில் படகு ஏறிப்போகையில் அலையின் கோஷ்டத்தினால் படகு கவிழ்ந்து பாய்மரம் காற்றில் பலமாய் அடித்ததினால் உடனே இறந்து, பிரேதமாக வீட்டுக்கு கொண்டு வரப்பட்டார். அவருடைய சிநேகிதர்களும், கம்பெனி வேலையாட்களும் திரளாய் பிரேதத்தைச் சுற்றி நின்றனர். "ஜீவனின் நடுவில் சாவுக்குட்பட்டிருக்கிறோம்" என்ற வசனத்தின்பேரில் சபைப் போதகர் கனம் ஞானவேதக்கண் ஐயர் சூழ்ந்துநின்ற இந்துக்களுக்கும் ரோமன் சபையாருக்கும் மற்றவர்களுக்கும் பிரசங்கித்தனர். 19—2—37 காலையில் துக்கவீட்டு ஆராதனையின்பின், ஊர்வலமாக திரள் ஜனம் பின்செல்ல பாட்டுகளுடன் எடுத்துச்சென்று, கூடலூர் S. P. G. கல்லறைத் தோட்டத்தில்

"கிறிஸ்துவில் மரணமடைதல்" என்ற பிரசங்கத்தின்பின் அடக்க நடந்தது. கல்லறைத் தோட்டத்திற்கு அநேக ஆங்கிலோ இந்தியரும், இந்துக்களும், முகம்மதியரும், இதர சபையாரும், பாரி கம்பெனி ஏஜண்ட் கனம் கில் துரையும் வந்திருந்தார். இவருக்கு வயது 40. இவர் காலம் சென்ற கூடலூர், பண்ணுருட்டி மிஷனெரி கனம் ரீட் பிரியம்மாள் எடுத்து வளர்த்த ரக்காபி அம்மாளின் மூத்த புதல்வர். இவரது தகப்பனர், லண்டன் மிஷன் போதகர் கனம் சுப்பராவ் ஐயர். இவரது மாற்றுந் தகப்பனர் ஸ்ரீமான் பண்ணுருட்டி மாணிக்கம் செட்டியார். இவருடைய மனைவி, ஐந்து சிறு பிள்ளைகளையும் பரம தேவன் ஆதரிப்பாராக.

Mr. மைக்கல் பாக்கியநாதன் ரேஞ்சர்: திருவண்ணாமலை பக்கத்திலுள்ள செங்கத்தில் காட்டிலாக்கா ரேஞ்சு ஆபீசராகவும் டேனிஷ் மிஷன் சபையை சேர்ந்திருந்த ஸ்ரீமான் மைக்கல் பாக்கியநாதன் என்பவர் பெப்ருவரிமீ 15உ காலையில் ஒரு ஜட்கா வண்டி ஏறி ஒரு கிராமத்துக்குப் போகையில் குதிரை மூர்க்கங்கொண்டு ஓடியதினால் வண்டி மோத, இவர் கீழ்விழுந்த அடியினால் உடனே உயிர்துறக்க நேரிட்டது. இவர் திருநெல்வேலியில் ஒரு யாதவ குடும்பத்திலிருந்து கிறிஸ்தவர் ஆனவர். பி.ஏ. பட்டத்தின்பின், டோரா நேன் காலேஜில் பயிற்சிபெற்று, காட்டிலாகா ஆபீசராக, ஜனங்கள் மதிப்புபெற்று உண்மையுடன் உழைத்துவந்தவர். இவர் கிறிஸ்தவ ஜீவியத்தில் முன்மாதிரியாகவும், சாட்சியாகவும், செங்கம் சபைக்கு பலவிதத்தில் உதவிபுரிந்தும் வந்தார். இவரது மனைவி, ஒன்பது பிள்ளைகளுக்காக ஜெபிப்போமாக.

Mrs. எஸ்தர் கமலம்: விருத்தாசலம் உபதேசியார் Mr. ஜெபமணி என்பவரின் மனைவியும், எலவனசூர் கோட்டை காலஞ்சென்ற இஸ்ரவேல் என்பவரின் புத்திரியுமான எஸ்தர் கமலம் அம்மாள் மார்ச்சுமீ 6உ விடியற்காலையில் பிரசவ பலயீனத்தினல் விருத்தாசலம் மிஷன் ஆஸ்பத்திரியில் இறந்துபோனர். இந்த அம்மாள் பட்டாம்பாக்கம் பள்ளிக்கூடத்தில் வாசித்து, சித்தூர் டிரெயினிங் பயிற்சிபெற்று, வேத அறிவு, வீட்டு ஒழுங்கு, சுறுசுறுப்பு, நேர்மையான குணம், இவைகளில் சிறந்து விளங்கினர்.

அன்று மாலை வீட்டு ஆராதனையில் சபைப் போதகர் "உங்கள் இருதயம் கலங்காதிருப்பதாக" என்ற வசனத்தின் பேரில் பிரசங்கித்து, ஊர்த்தெருக்களின் வழியாய் பாடல்களோடு சபையார் அனைவரும் பின்தொடர எடுத்துச்சென்று



ஆலய ஆராதனை நடத்தி, கல்லறை தோட்டத்தில் "அநேக வாசஸ்தலங்களுண்டு" என்ற வசனத்தின்பேரில் பிரசங்கம் நடத்தியபின் அடக்கஞ் செய்யப்பட்டது. இந்த அம்மாளுக்கு வயது 25. விட்டுப்போயிருக்கும் ஒரு 3 வயதுள்ள பெண், அருமையான புருஷன் இவர்களை கர்த்தர் ஆறுதல்படுத்துவாராக.

———:———

மரண அறிக்கை

என் அருமை மனைவி பாப்பாத்தி அற்புதம் அம்மாள் என்னுடன் கடந்த 53 வருஷங்களாக வாழ்ந்து, 1935-ம் ஆண்டு தன் தங்க ஜுபிலியை பிள்ளைகள், பேரப்பிள்ளைகள், பந்து மித்திருடன் கொண்டாடி, கடைசியாக 1937ம் வருஷம் புது வருட தினம் தன் மாணத்திற்கு தன்னை நல்லாயத்தப்படுத்தி தன் பிள்ளைகள், பேரப்பிள்ளைகள், நெருங்கிய பந்துக்கள் சூழ்ந்திருக்க, காலை 2 மணிக்கு அமைதலாய் ஆண்டவரின் இராஜியம் சென்றனர்.

தான் இச் சென்னையில் வேதாகம ஸ்திரீயாக அநேக வருஷங்கள் இந்துக்கள் மத்தியில் உழைத்து தன் பொறுமை, அன்பு, இரக்கம், முதலிய சிறந்த கிறிஸ்தவ லக்ஷணங்களை முன் மாதிரியாக காண்பித்து ஜீவித்து வந்தார்கள். அவர்களது சடலம் சங். K. தாவீது ஐயர் துக்க ஆராதனை வீட்டில் நடத்திய பின் அன்று மாலை 4 மணிக்கு சென்னை புரசை அடைக்கல நாதர் ஆலயத்திற்குக் கொண்டுவரப்பட்டு சங். G. தானியேல் ஐயர் பீட ஆராதனை செய்ய, சங். அப்பாதுரை ஐயர் அவர்கள் துக்கப் பிரசங்கம் நடத்திய பின், நமது மிஷன் உத்தான தோட்டத்தில் தனது விருப்பப்படி தனது தகப்பனர் மாஜி தம்புசாமி நாயுடு அடக்கம் செய்யப்பட்ட கல்லறையிலேயே சபை குருவால் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது. வயது 71.

"உம்முடைய சித்தம் செய்யப்படுவதாக." ஆமேன்.

தங்கள் கடிதங்கள் மூலமாய் எங்களை ஆறுதல் படுத்தின எங்களது பந்து மித்திரர்களுக்கு எங்கள் நன்றி அறிதலை தெரிவிக்கிறோம்.

குமாரர்கள்
V. S. பரமானந்தம்
V. A. தேவ இரக்கம்

T. M. வேதநாயகம் நாயுடு,
Rtd. Writer, E. L. M. Fab.
High School, Purasawalkam.

தேகப் பயிற்சிப் பாடசாலே. விசேஷமாக ஆரம்பப் பாடசாலே உபாத்திமாரின் பிரயோஜனத்திற்கென்று கோயமுத்தூர் Y. M. C. A. ஆதரவில் மேமீ 1உ முதல் 29உ வரையில் தேகப் பயிற்சிப் பாடசாலே நடத்தப்படும். அதற்காக ஆளொன்றுக்குச் செலுத்தவேண்டிய கட்டணம் ரூ. 3; சாப்பாட்டுச் செலவு பிரத்தியேகம். இதில் சேர விரும்புவோர் ஏப்ரில்மீ 15உக்குள் கோயமுத்தூர் Y. M. C. A. காரியதரிசிக்கு மனுப்பண்ண வேண்டும்.

துக்கச்செய்தி

எனது அருமை மாமனுரும், சீர்காழி, தஞ்சை முதலியவிடங்களில் பயனுற உழைத்து Drill Master என்று யாவராலும் நன்கு மதிக்கப்பட்டவருமான M. R. Ry. **S. Joseph Servai** அவர்கள் சில காலம் வியாதிப்பட்டு, பலவித சிகிச்சை செய்து பயன் படாமல், தமது பிள்ளேகளுடன் ஆண்டவரின் திருப்பந்தியில் பங்கு பெற்று, அவாவற்கு வேண்டிய புத்திமதியான வார்த்தைகளேயும் ஆசீர்வாதத்தையும் கூறி, கடைசி பரியந்தம் புத்தி சுயாதீனத்துடனும் நல்ல ஆயத்தத்துடனும் தன்னே ஆண்டவரின் திருச்சித்தத்துக்கு ஒப்புக்கொடுத்து, கடந்த பெப்ரவரி மாதம் 20ம் தேதியாகிய சனிக்கிழமை காலே 4-30 மணிக்குக் கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரை அடைந்தார். அவரது ஜடலம் அன்று சாயங்காலம் தஞ்சையிலுள்ள தேற்றரவாளன் ஆலயத்துக்குக் கொண்டுபோகப்பட்டு, கனம் G. John David ஐயரவர்கள் பரி. லூக். 2, 29-32 வசனங்களின்பேரில் மிக்க ஆறுதலான துக்க பிரசங்கம் செய்தபிறகு நமது சபையாரும் இனஜன பந்துக்களும் புடைசூழ, தஞ்சை உத்தான பூமியில் தமது அருமை மகன் (W. J. Chellappa B.A) கல்லறையின் பக்கத்தில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று கனம் G. John David ஐயரவர்களால் சகல கிறிஸ்தவ மரியாதையுடனும் நல்லடக்கம் செய்யப்பட்டது. வயது 70.

ஆண்டவரே, இப்போது உமது அடியானே உம்முடைய வார்த்தையின்படி சமாதானத்துடனே அனுப்பி விடுகிறீர். லூக். 2, 29,

Purasawalkam, Madras. 9—3—1637

M ABRAHAM,
*Assistant,*
*E.L.M. Fabricius High School.*

## *Have you joined the Tamil I. B. R. A?*

**You may join at any time, and read through the Bible in five years, with devotional comments.**

Membership subscription 9 annas a year; in groups of 10 or more, 6 annas a year.

***International Bible Reading Association,***
*Kilpauk, Madras*

பரம இளேப்பாறுதல்

எனது அருமை மனேவி தவமணி அம்மாள் பிரசவத்திற்காக மாயவரம் போய் இருக்கும்போது, 15—2—37 திங்கள்கிழமை மாலே 6 மணிக்கு பிரசவ சமயத்தில் பரம தகப்பனின் நித்திய இளேப்பாறுதலுக்குள் பிரவேசித்தார்கள்.

அடுத்தநாள் யாவரும் கூட, தவமணி அம்மாளின் சடலம் தெய்வாலயத்துக்குக் கொண்டுவரப்பட்டு கனம் பிச்சை ஐயர் அவர்கள் துக்கப் பிரசங்கம் செய்தபின், மாயவரம் ஆத். மிசி. உத்தான தோட்டத்தில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது.

"நேராய் நடந்தவர்கள் சமாதானத்துக்குள் பிரவேசித்து தங்கள் படுக்கைகளில் இளேப்பாறுகிருர்கள்." எசா. 57-2.

"ஆதாமுக்குள் எல்லாரும் மரிக்கிறதுபோல், கிறிஸ்துவுக்குள் எல்லாரும் உயிர்ப்பிக்கப்படுவார்கள். 1 கொ. 15-22.

துக்கத்தில் அனுதாபப்பட்டு நேரிலும், கடிதங்கள் மூலமாயும் ஆறுதல்படுத்தின யாவருக்கும் எங்கள் வந்தனத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேம்.

17—4—1937 சனிக்கிழமை மாலே $6\frac{1}{2}$ மணிக்கு தரங்கையில் என் வீட்டில் ஜெபக்கூட்டம் வைக்கப்போகிறபடியால் பெரியோர், சிநேகிதர், உறவினர், பந்துக்கள் யாவரும் வந்து எங்களே ஆறுதல்படுத்திப்போகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

Tranquebar, 12—3—1937.

M. JOHN THOMAS,
*Assistant, L.E.L.M. School.*

## NOTICE

லுத்தரன் வாலிபர் மகாநாடு நாளது ஏப்ரில்மீ 23—26உகளில் தரங்கையில் நடைபெறும். பிரவேசப் பதிவு சந்தா ஒரு ரூபாய். Dr. Howard W. Guinness L. R. C. P., M. R. C. S., Dr. D. D. Dasen, M. A., Ph. D., Mr. S. W. Savarimuthu, B. A., B. D., Rev. Paul Gaebler Lic. D. முதலியோர் அதில் முக்கிய உபந்நியாசகர்.—கருணைகரபுரி படைமுயற்சி மேமீ 6-15உகளில் நடைபெறும். S. DEVANESAN.

